5th March 1958]

*Dehorning and removing of ears of cattle*

* 208 *Q.*—SRI A. VEDARATHNAM: Will the Hon. the Minister for Home be pleased to state whether the Government have any proposal to bring the offence of dehorning and removing of ears of the cattle under the purview of the Society for the Prevention of Cruelty to Animals?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: No, Sir.

SRI A. VEDARATHNAM: இம்மாதிரி மாடுகளின் கொம்பைத் தீய்த்து காதுகளை அறுப்பதால் ஏதேனும் நலன் உண்டு என்று கால்நடை நிபுணர்கள் யாரேனும் கூறியிருக்கிறார்களா? அப்படி இல்லை என்றால் அனாவசியமாக இந்தக் கொடும் துன்பத்தைச் செய்வதில் இருந்து தடுக்க சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கொம்பை வெட்டுவதால் மாடுகளுக்கு பலம் அதிகரிக்கிறது என்று மாடு வைத்துக் கொண்டிருப்பவர்கள் நம்புகிறார்கள். இது, நிபுணர்களின் அபிப்பிராயம் அல்ல. அதனால் பலம் அதிகமாகிறது என்றாலும் கொடுமை விளைவிக்கக் கூடியது தான் அது. அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை மிருகங்கள் கொடுமை தடுப்புச் சட்டப்படி, 3-வது பிரிவுப்படி எடுத்துக் கொள்ளலாம். அப்படி சர்க்கார் நடவடிக்கை எடுப்பதோடு கூட அங்கத்தினர்களைப் போன்றவர்களின் ஒத்துழைப்பும் அக்கரையும் வேண்டும். அவர்கள், அப்படிச் செய்யக்கூடாது என்று பிரசாரம் செய்ய வேண்டும். தஞ்சையில் தான் இது அதிகமாக இருக்கிறது.

SRI A. GOVINDASAMY: தஞ்சையில் இது அதிகமாக இருக்கிறது என்று அமைச்சர் அவர்கள் சொல்கிறார்கள். இதைத் தடுப்பதற்கு இனியாவது அரசாங்கம் முயற்சிக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: சட்டத்தின் கீழ் இது குற்றந்தான். குற்றம் என்றால், அது அதிகாரிகளின் கவனத்திற்கு வரும் போது நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படும். அதோடு பொது மக்களின் ஒத்துழைப்பும் வேண்டும்.

SRI R. SRINIVASA IYER: சூட்டுக்கோலால் மாட்டுக் கொம்பைத் தீய்க்காமல் துன்பம் இல்லாத வழியில் கொம்பைத் தீய்க்க வழி இருப்பதாக இதர மாகாணங்களில் இருந்து தெரிய வருகிறது. அதை பிரசாரம் செய்ய சர்க்கார் முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதைப்பற்றி என்னிடம் தகவல் இல்லை.

SRI S. NAGARAJA MONIGAR: அப்படி இத்தகைய கொடுமைகள் செய்யவிடாமல் நடவடிக்கை எடுத்துக் கொள்வதாய் இருந்தாலும் கூட, இது குறித்து எஸ்.பி.ஸி.ஏ. இலாகா சரியாக கவனிப்பதில்லை என்பதால் கால்நடை அதிகாரிகளுக்கு அந்த அதிகாரங்களை கொடுக்கக்கூடாதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: என்னிடம் வரும் புகார்கள் எஸ்.பி.ஸி.ஏ.க் காரர்கள் அதிகமாகக் கவனிக்கிறார்கள் என்பதுதான்.

SRI K. B. S. MANI: மாட்டுக் கொம்பைத் தீய்க்கக்காரணம், தூக்கு வெறி மாடுகள் ரொம்பப் பொல்லாததாகவும், முட்டுவதாகவும் இருப்பதால்தான் கொம்பைத் தீய்த்துவிடுகிறார்கள். அதைத்தான் தஞ்சையிலும் கையாளுகிறார்கள். அதை நீடிக்க விடும்படி அனுமதிப்பார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அங்கத்தினர் சொல்லும் காரணத்தையும் நான் ஒப்புக்கொள்ளமுடியாது.

[5th March 1958

SRI M. JAGANNATHAN : மாடுகளுக்கு இழைக்கப்படும் இந்த துன்பங்களை தவிர்க்க பிரசாரம் செய்யவேண்டுமென்று அமைச்சர் குறிப்பிட்டார்கள் பிரசாரம் செய்யவேண்டிய பொறுப்பை தனியாருக்கு விடுவதற்குப் பதிலாக எஸ்.பி.ஸி.ஏ. சங்கம் மூலம் செய்ய, அதற்கு போதிய ஊக்கமும் ஆக்கமும் அளிக்கும் வகையில் அதற்கு போதிய மான்யம் கொடுக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எஸ்.பி.ஸி.ஏ.க்கு மான்யம் கொடுக்கப்பட்டு வருகிறது. அது மட்டும் கவனித்தால் போதாது. பொதுமக்களுக்கும் இதில் ஒரு உணர்ச்சியும் அக்கரையும் இருக்கவேண்டுமென்றுதான் நான் சொல்கிறேன்.

SRI T. KARIA GOUNDER : இவ்வளவு நேரம் சபை கொம்பு அறுக்கிற வாதத்தில் இருந்தது.வாணியம்பாடி, ஜோலார்பேட்டையில் ஆயிரக் கணக்கான மாடுகளை அறுத்து மைசூருக்கு ஏற்றுமதி செய்வது சர்க்காருக்குத் தெரியுமா ? அதைத் தடுக்க நடவடிக்கைகள் எடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மைசூரிலிருந்து நம் ராஜ்யத்திற்கு மாடுகள் கொண்டு வரப்படுகிறது என்று கேள்விப்பட்டேன், இரண்டு நாட்களுக்கு முன்பு. இதுமாதிரி தகவல் எனக்கு தெரியாது.

SRI V. K. KOTHANDARAMAN : சட்டத்தின் கீழ் கொம்பு அறுப்பது, சூடு போடுவது, காது அறுப்பது, இவைகள் கொடுமையான காரியங்கள் என்று இருக்கும்போது, விதை அடிப்பதையும் கொடுமை என்று சொல்லி அதையும் சட்டத்தின் கீழ் கொண்டு வருவார்களா ?

MR. SPEAKER : The hon. Member may put a separate question.

1–30 p.m. SRI A. V. P. ASAITHAMBI : இந்த கால்நடைகளை துன்பப்படுத்தாமல் இருப்பதற்காக சட்டம் இருப்பதாக மந்திரி அவர்கள் சொன்னார்கள். அந்தச் சட்டத்தை தீவிரமாக அமுல் நடத்துவதற்காக எல்லா இடங்களுக்கும் ஒரு சுற்றறிக்கை அனுப்ப ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது அதிக தீவிரமாக நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது என்று தான் புகார் இருந்து வருகிறது.

SRI K. VINAYAKAM : ஸார், தஞ்சையில் மாட்டின் காதை கீழே அறுப்பதின் காரணம் அவைகளின் காது நீளம் கூடுதலாக இருப்பதால், அவைகளுக்கு பார்வை தெரிவதற்காகத்தான் இவ்விதம் அறுக்கப்பட்டு வருகிறது என்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? ஆகவே இவ்விதம் பழக்கத்தில் இருந்துவரும் வழக்கத்தை இன்னும் நீடிக்க வழி செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் அவர்கள் இதில் கொஞ்சம் ஆராய்ச்சி செய்திருப்பதாக தெரிகிறது. ஆனால் நான் கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லும் காரணத்தை ஒப்புக் கொள்ள முடியாது.

SRI A. V. P. PERIAVALAGURUVA REDDI : சென்னையில் பால் பீச்சுகின்ற பொழுது உண்மையாக கன்றுகளுக்கு பால் கொடுக்காமல் வெறும் கன்றின் தோலை வைத்துக்கொண்டு பாலை பீச்சுகிறார்கள். இதை தடுப்பதற்கு மந்திரி அவர்கள் ஏதாவது நடவடிக்கை எடுப்பார்களா ?

MR. SPEAKER : இந்தக் கேள்வி கொம்பைப்பற்றியும் காதைப்பற்றியும் உள்ள கேள்வி. ஆகவே இது சம்பந்தமில்லாத கேள்வி. இதற்கு பதிலளிக்க வேண்டியதில்லை .